உ

கணபதி துணை.

ஸ்ரீவில்லிபுத்தூராத்

திருவேங்கடையர்செய்த

# உவமானசங்கிரகமும்,

புகழேந்திப்புலவர்செய்த

# இரத்தினச்சுருக்கமும்.



இவை

யாழ்ப்பாணத்து நல்லூர

சதாசிவப்பிள்ளையால்

சென்னபட்டணம்:

வித்தியாநுபாலனயந்திரசாலையில

அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.

இதன்விலை அணா-௧வ.

நந்தன௵ பங்குனி௴.

உ

கணபதி துணை.

# உவமான சங்கிரகம்.



## காப்பு.

நேரிசை வெண்பா.

வேதத் தமிழ்மாறன் வெற்பனையார் கேசாதி
பாதத துவமானப் பண்பெல்லாந்—தாதின்
முருகூர் மலர்க்குழலாய் மூதுரையாற் சொல்வன்
குருகூ ரனைத்தொழுது கொண்டு.

---

கூந்தற்கும், நெற்றிக்கும்

கொண்டலுங்கூந்தற்பனையுங்கொன்றைக்காயுமிரு
தண்டலையுங்கார்மணலுஞ்சைவலமும்—வண்டினமு
தண்குழலையொப்பாந்தனிவாணுதற்குநிகர்
வெண்பிறையுஞ்செஞ்சிலையுமே.

புருவத்திற்கும், கண்ணிற்கும்.

மேவிற்பருவம்விழிக்குவண்டுந்தாமரையுங்
காவியுங்கூற்றம்புங்கருவிளையு—மாவடுவும்
வேலுங்கடலும்விடமுமமுதும்வாளுஞ்
சேலுமபிணையுமிணைசெப்பு.

முகத்திற்கும், காதிற்கும், கபோலத்திற்கும்,
மூக்கிற்கும்.

செப்புமுகங்கமலந்திங்கள்காதிற்குவள்ளை
யொப்பரியகத்தரிகையூசலா—மப்புநிலை
கண்ணாடிசாணைகபோலங்குமிழ்சாதி
யெண்ணாசிகைக்குவமையே.

## இதழ்க்கும், வாய்க்கும், பல்லிற்கும், கழுத்திற்கும்.

ஏய்கிடைகோபந்துப்பிலவுமுருக்கிதழாம்
வாய்குமுதமவிழிதொண்டைவாரிசமாம்—தோய்கழுமுண்
முதநுத்தளவமுருந்தெயிறுங்கந்தரத்தை
நததுக்கமுகெனவேநாட்டு. (௪)

## மொழிக்கு.

நாட்டுங்கதலிகடுக்கரும்புமாவருக்கை
காட்டுங்குயில்கிள்ளைகற்கண்டு—வேட்டருந்துஞ்
சீனிசருக்கரைசெந்தேனமுதம்பால்குழல்யா
ழானபதினன்குமொழிக்காம். (௫)

## தோளிற்கும், முன்கைக்கும், அங்கைக்கும், கைவிரற்கும், கைந்நகத்திற்கும்.

காம்புகழைதோளிணைமுன்கைமகரயாழாகுந்
தேம்பதுமமாந்தளிர்பூஞ்செங்காந்தள்—யாம்புகல்வோ
மங்கைவிரல்கெளிறுமவவிரலின்கூருகிர்க்குப்
பைஙகிளிமூக்கென்றுவமிப்பாம். (௬)

## கொங்கைக்கும், அக்கொங்கைக்கண்ணிற்கும், உதரத்திற்கும், உந்திக்கும், மடிப்பிற்கும்.

பாங்கரும்புகுதுகிண்ணம்பைங்குரும்பைசெப்புமுடி
கோங்கரும்புதாளங்குமிழிசிமிழ்—பூங்கமலம்
பம்பரம்வெற்பிளநீர்பந்துசகோரங்கலசங்
கும்பமருப்பியானைகுடம். (எ)

குட்டமுதனுலக்துமணிக்கொங்கைகண்ணீலம்
வடமுதரமுந்திமகிழம்பூ—படர்சுழியா
மேறும்படியுமெறிநீர்த்தடந்திரையுங்
கூறும்படிமடிப்புக்கொள். (அ)

### உரோமக்கொடிக்கு.

கொண்டவுரோமக்கொடிக்கேயெறும்பொழுக்கும்
வண்டொழுக்குங்காஞ்சிமணிச்சுடருங்—கண்டகர்காற்
சங்கிலியும்வேழத்தறியுஞ்சலாகையுநீள்
பங்கயத்தினாளமும்வைப்பார். (௯)

### இடைக்கு.

பாரிலிடைக்கரவும்பைங்கொடியும்பூங்கொம்பு
மாரனுடம்பும்வகிரிழையு—நேர்கைப்
பிடியளவுந்தேய்ந்தபிறைக்கொழுந்துமின்னு
துடியளவுங்கோளரியுஞ்சொல். (௧0)

### அல்குற்கும், பெண்குறிக்கும.

சொல்லியவல்குல்சுனையோடரசிலையுஞ்
சில்லியும்பொற்கொடிஞ்சித்தேர்த்தட்டும்—வல்லரவு
மண்குறிக்குஞ்சிற்றாலவட்டமும்பட்டமுமாம்
பெண்குறிக்குமான்குளம்பைப்பேணு. (௧௧)

### தொடைக்கும், முழங்காலிற்கும், கணைக்காலிற்கும்.

பேணுங்கதலிபிடிக்களிற்றின்கைகுறங்காம்
பூணுமுழந்தாளலவன்போலுமே—வேணுவுடன்
சோகமுறுமம்புபெய்தூணியும்வராற்கன்றுங்
காகளமும்போன்றகணைக்கால். (௧௨)

### பரட்டிற்கும், குதிக்கும், புறவடிக்கும், கால்விரற்கும்.

காலிற்பரடிரண்டுங்கைத்தராசொக்குமிரு
காலிற்குதிமதிக்குங்கந்துகமா—நூலெழுது
புத்தகமாமைபுறவடியொப்பாந்திரண்ட
வித்துருமம்போலும்விரல். (௧௩)

## காமினகத்திற்கும், காலிற்கும்.

விரற்பவளங்கூருகிர்க்குவெண்பிறையுமுத்து
நிரைக்கழுநீர்ச்செவ்விதழுநேராம்—பரப்பியல்கா
லஞ்சநறுந்தூவியணிச்சமசோகங்கமலம்
பஞ்சிலவுமாந்தளிரொப்பாம். (கச)

## நடைக்கும், சாயற்கும், மேனிக்கும், மேதமலுக்கும்.

பாயற்பிடிவேழம்பைந்தூவியன்னநடை
சாயற்குமின்னமுதந்தான்மயிலாஞ்—சேயிழையாய்
மாந்தளிர்பூஞ்சண்பகப்பூமாமேனியம்மேனி
பூந்திதலைவேங்கைபசும்பொன். (கரு)

உவமானசங்கிரகம்

முற்றிற்று.

---

கணபதி துணை.

# இரத்தினச்சுருக்கம்.



## பிரிவாற்றாமைக்குரிய குறிகள்.

### கட்டளைக்கலித்துறை.

சோருந்துகிலும்வளைகலைநாணுந்துணிந்துமட
லூருந்தொழிலுமொளிகூர்பசலையுமோடரிக்கண்
ணீருங்கிழியும்பருமணற்கூடலுநின்றரற்று
மூருந்தனியுமறைபோனநெஞ்சமுமுண்டென்பரே. (௧)

உண்ணாதுவள்ளத்தமுதமுமூசலுங்கந்துகமு
நண்ணுவியல்புநடுக்கமுஞ்சோபமுநாள்பலவு
மண்ணாதமேனியும்வாராவுறக்கமுமாசுடையும்
புண்ணானநெஞ்சும்புகைதாழுயிர்ப்பும்பொரிமுத்துமே. (௨)

### பகை.

முத்துங்களபமுந்தண்பனிநீருமுயங்குமலர்த்
தொத்துங்குளிரியுந்தூய்மலர்ப்பாயலுஞ்சூழ்ந்துபுறங்
கத்துங்கடலுங்கதலியுமாலியுங்கங்குலுமிப்
பத்தும்பெரும்பகையாய்விட்டவாமொருபைந்தொடிக்கே. ()

### நீக்கல்.

### நேரிசைவெண்பா.

தொடியும்பலகலனுந்தூய்கச்சுமுத்துங்
கடிகமழ்தாரும்புனையாள்கால—விடமனைய
சேல்விழிக்குமையுந்திலகநுதற்குங்குறியாள்
சாலமுடியாளளகந்தான். (௪)

தானேகழங்கம்மனைதண்சுனைநீராடாள்
கானேரிசைபயிலாள்கைக்கிளியு—மானினமும்

பூவையையும்போற்றுள்பொருந்தவேபாங்கியருக்
கேவல்புரியாள்களிப்பதென்று. (௫)

துயர்க்கேது.

தென்றற்கும்வீணைக்குஞ்சேமணிக்குங்கோகிலத்துக்
கன்றிற்கமைக்காழிக்கம்புலிக்கு—நின்றரற்று
மன்னைக்குமாரற்கயர்ந்தாளென்றன்னமே
யென்னைக்குமாரற்கியம்பு. (௬)

தூது.

இயம்புகின்றகாலத்தெகினமயில்கிள்ளை
பயம்பெறுமேகம்பூவைபாங்கி—நயந்தகுயில்
பேதைநெஞ்சந்தென்றல்பிரமரமீரைந்துமே
தூதுரைத்துவாங்குந்தொடை. (௭)

மன்மதனுக்குரிய மாலை முதலியன.

தொடையிலஞ்சிமஞ்சளிளஞ்சோலைபடைவீடு
படைமங்கையர்கமுகம்பாளை—யிடுகெவரி
காளாஞ்சிமல்லிகையாங்காரிகையீர்மாரனுக்கு
வாளாமோலைப்பூவுமால். (௮)

ஆலைக்கரும்புசிலையைங்கணைபூநாண்சுரும்பு
மாலைக்கிளிபுரவிமாருதந்தேர்—வேலை
கடிமுரசங்கங்குல்களிறுகுயில்காளங்
கொடிமகரந்திங்கள்குடை. (௯)

மன்மதன்கணை.

குடைகவித்தகன்கஞ்சங்கோதறுசூதப்பூ
கடியுமசோகந்தளவுகாவி—படையெடுத்து
வாங்காச்சமர்விளைக்குமாரனுக்கெப்போதுமங்கை
நீங்காக்கணையாமினை. (௧௦)

## கணைச்செயல்.

நினைக்குமரவிந்தநீள்பசலைமாம்பூ
வனைத்துணவுநீக்குமசோகு—வனத்திலுறு
முல்லைகிடைகாட்டுமோதேமுழுநீலங்
கொல்லுமதனம்பின்குணம். (௧௧)

## கண்ணினியல்பு.

குணமுங்கதமுங்கொடுந்தொழிலுமன்பின்
கணமுங்குடியிருப்பாக்காட்டு—மிணையாய்த்
துடிக்குஞ்சுழலுஞ்சுருட்டுமென்பருள்ளங்
குடிக்குமநுராகவஞ்சங்கூர்ந்து. (௧௨)

வஞ்சங்கொலைபோர்மதனுகமம்விரகந்
துஞ்சுங்களவுசுகங்கலக—மஞ்சனமென்
செம்மைவெளுப்புக்கறுப்புச்செவ்வரிநீலம்பெருமை
வெம்மைமதர்ப்புக்கடைக்கண்வேல். (௧௩)

## கண்ணிற்கிணை.

வேல்வாள்கணைவண்டுவேலைவிடமமுதஞ்
சேல்பங்கயங்குடங்கைசெங்காவி—காலன்
வடுமான்கருவிளையைவண்சகோரத்தை
யடுமாங்குழையையடர்ந்து. (௧௪)

## கொங்கையினியல்பு.

அடர்ந்துதிரண்டிடங்கொண்டண்ணூந்துவிம்மிப்
படர்ந்துசுணங்குபரந்து—தடங்கொண்
டிணைத்துத்ததும்பியிறுமாந்துவீங்கிப்
பணைத்துமுகம்பார்க்குமதுபார். (௧௫)

## கொங்கைக்கணி பொருளும், இணையும்.

பார்தண்களபம்படீரம்புழுகுபனி
ீர்குங்குமஞ்சாந்துதித்திலங்கச்—சாரவடங்

பூ கற்பகவல்லிகரும்புகருங்கண்மாழை
பொற்சிறுபுண்மாலைபொருப்பு. (கசு)

பொருப்பிளநீர்வெண்மகுடம்பொற்குடஞ்செப்பியானை
மருப்புவனசஞ்சக்ரவாகந்—திருக்கலசங்
கோங்கரும்புபந்துகொலைச்சூதுதாளமொக்கு
ணீங்கியிராதேபுழுகுநெய். (கஎ)

கூந்தலினியல்பும், அணிபொருளும்.

நெய்த்துக்கருகிநெறித்துவிடும்புமாலை
வைத்துக்கடைகுழன்றுவார்ந்தொழுகி—மொய்த்தளிகள்
சூழ்ந்துவடிவம்பலம்பித்துஞ்சுடைத்தாயூட்டுபுகை
வாழ்ந்துதகரங்கமழுமால். (கஅ)

மாலைகழுநீர்முல்லைமல்லிகைசெவவந்திபிச்சி
யேலம்வகுளமிலைத்தொடைதேன்—சாலநறும்
புன்னைபசும்பாளைபொலிந்துபிடித்தடக்கை
பின்னிவிட்டகூந்தலெனப்பேசு. (கக)

கூந்தற்கிணை.

பேசுகுழலைப்பிறங்குமுகிலென்று
மாசிலாநீலமணியென்றும்—வீசுமற
லென்றுமிருளென்றுமெழிற்கவரிபாசிக்கொத்
தென்றுமுவமையியம்பு. (உ0)

மொழிக்கும், அதரத்திற்கும், பற்குமிணை.

இயம்புமொழிகிள்ளையிரங்கிசையாழ்வீணை
வயங்குகருங்குயில்வண்பூவை—தயங்கினிய
பாகுகரும்பமுதம்பாறேன்மதுப்பழமென்
றூகுமதரம்பவளமாம். (உக)

ஆமேபவளமரக்காம்பன்முருக்கிலவம்
பூமெல்லிதழ்வீழிப்பொற்கனியாந்—தாமமணிக்

குல்லையருந்தொண்டைகொடித்தூதுளைகோப
முல்லைமுருந்தெயிறுமுத்து. (உஉ)

முகத்திற்கும், கழுத்திற்கும், இடைக்குமிணை.

முத்தார்முளரிமுழுமதியமார்திலகம்
வைத்துநகைகாந்திமருவுமுக—நத்துடனே
பூகம்வரிக்கழுத்துப்பூங்கொடிமின்வாளிவஞ்சி
மாகந்துடிநூன்மருங்கு. (உங)

நுதற்கும், வெயர்வைக்கும், சொற்குமிணை.

மருங்கொசியுமின்னார்தம்வாணுதலைவானத்
தரும்புங்குழவிமதியாயும்—புரந்தரன்றன்
வில்லெனவுமுத்தம்வெயர்வெனவுமேவிரும்பிச்
சொல்லும்பாகுங்கரும்புஞ்சொல். (உச)

புருவத்திற்கும், மூக்கிற்கும், கபோலத்திற்கும், காதிற்குமிணை.

கரும்புருவம்வெண்பிறையுங்கைச்சிலையுநாசி
யரும்புகுமிழ்சண்பகமெட்பூவாம்—விரும்பியிடுந்
தர்ப்பணங்கபோலந்தழைகாதுகத்தரிகை
பொற்புவள்ளையூசல்புகல். (உரு)

கைக்கும், நகத்திற்கும், வாய்க்கும், நகைக்கும், மெய்க்குமிணை.

புகலுகின்றசெங்காந்தள்புண்டரிகஞ்செங்கை
யுகிருவமைகிள்ளையொளிர்மூக்காம்—பகர்குமுதஞ்
செய்யவாயொப்பாஞ்சிறந்தநகைவெண்ணிலவாம்
மெய்ம்மாந்தளிரென்பவே. (உகா)

தோள், வயிறு, உந்தி, அல்குல், தொடை, முழந்தாள், கணைக்காலிற்குமிணை.

வேயிருதோளாலுதரமிக்கவுந்திநீர்ச்சுழியாஞ்
சேயமணியாலவட்டந்தேரரவு—தூயவல்குன்

மென்கதலியூருவிளங்குமுழந்தாளலவ
னன்கணைக்காலுவவராலுடு. (உ௭)

புறவடிக்கும், உள்ளடிக்கும், குதிக்குமிணை.

நாடும்புறவடியேநன்கமைந்தபுத்தகமு
மோடுகின்றவாமையுறுப்புமாந்—தோடவிழுங்
கஞ்சமலருள்ளடியேகந்துகமாகுங்குதியே
வஞ்சமறச்சொல்லுமருங்கு. (உ௮)

மகளிர்விளையாட்டிற்குரியன.

மருங்குவளர்பூங்காமலர்வாவியூச
திருந்துமணிச்செய்குன்றுதேமா-விரும்பமுத
பானங்கிளிபூவைபந்துகழங்கன்னமயின்
மானமுல்லைப்பந்தர்வளர்ப்பு. (உ௯)

மின்னார்முற்றோன்றுமிசை.

வளர்க்குஞ்சிறுதூவிவண்டறுகாற்றும்பி
யளிக்குங்குலவுஞிமிறார்ப்புங்—களிக்குஞ்
சுரும்புமதுகரமுஞ்சூழ்விளரிப்பாட்டு
முருந்தெயிற்றுமின்னார்க்குமுன். (௩௦)

தூதுக்குரியனவும், பாணர்பெறுவனவும்.

கலித்துறை.

முன்னுகும்பூவைமுலையேறுதங்கமுடிபுரைக்கப்
பின்னுகுமன்றிற்பெரும்புகழ்ப்பாணன்பெறும்பரிசில்
பொன்னாரணிகலம்பூமாதுரிமைவெம்போர்க்களமா
ரொன்னாரிடுதிறைவென்னிடுவார்தமுறையிடமே. (௩௧)

நவரசம்.

இடமொன்றுமைக்கரனீந்தமெய்ப்பாகத்தெழிற்கிணையாத்
திடமொன்றியவணச்சிங்காரம்வீரஞ்சிரிப்பருளே
யடமின்றியசினங்குர்ச்சையுஞ்சாந்தமுமற்புதமுங்
கடியென்றுமொன்பதுமாநல்விரதத்தைக்காட்டுதற்கே. (௩௨)

பஞ்சவாசம், பஞ்சசயனம்.

தற்கோலமேலமிலவங்கம்பாளிதஞ்சாதியங்காய்
நற்கூறைநாற்றமயிற்சேணம்பஞ்சணைநற்றுகிலே
விற்கூறுதூவிதண்மீப்பாய்சயனம்விளங்குமைந்தாம்
பொற்கோட்டலர்முலைப்பூவையன்னரன்புபோர்த்தவர்க்கே.

எண்வகைமணம்.

கேட்பிரமம்பிரசாபத்தியத்தொடுகேண்மையுறக்
காட்டியவாரிடங்தெய்வம்புகழ்பெறுகாந்தருவ
நாட்டாசுரமுமிராக்கதநண்ணும்பைசாசமென்றே
சாட்டுதலெண்மணமாகுந்தகையன்புதந்திடவே. (க.ச)

முத்துப்பிறப்பிடம்.

தந்திவராகமருப்பிப்பிபூகந்தனிக்கதலி
நந்துசலஞ்சலமீன்றலைகொக்குநளினமின்னார்
கந்தரஞ்சாலிகழைகன்னலாவின்பல்கட்செவிகா
ரிந்துவுடும்புகராமுத்தமீனுமிருபதுமே. (க.ரு)

செல்வமாதிருப்பிடம். வெண்பா.

பதுமங்கொடிநகர்மின்பைந்துளவுவில்வங்
கதிர்விளவுசங்குகடறீபம்—வதுவைமனை
நற்பரிபாற்பாண்டமிவைநாண்மலராணீங்காது
நிற்பிடநல்லோர்நெஞ்சுமே. (க.சா)

மதன்கணையெய்யுமியல்பு.

நெஞ்சிலரவிந்தநீள்குதங்கொங்கையிலே
துஞ்சும்விழியிலசோகமாம்—வஞ்சியர்தஞ்
சென்னியிலேமுல்லைதிகழ்நீலமல்குலிலே
யன்னவேயெய்யுமியல்பாம். (க.எ)

வேணகர்க்கடையாளம்.

ஆமேகொடிவள்ளையம்புயமுநெய்தற்பூ
பூமேசுரும்புபுனலாட்டுக்—காமவே

டென்றலுறுமென்மறுகுதேராடன்மாடமதி
லன்றுநகருக்கடையாளம். (௩௮)

## மின்னார்கைத்தொழில்.

அம்பொற்றொடியணிமினார்தங்கைக்கைத்தொழில்
செம்பவளமெல்விரலைச்சேர்த்தெண்ண—லம்பெழுதல்
பூசித்திலைகிள்ளல்பூத்தொடுத்தல்பண்ணெழில்யாழ்
வாசித்தலென்றுரைசெய்வார். (௩௯)

## பெண்களின்பருவம்.

வாரிமணிவெய்யோன்மதிபாரதம்வள்ளல்
சீரிலறம்வளர்க்குஞ்செய்கைதா—ஞரிகேள்
பேதைமுதலாகப்பேரிளம்பெண்ணீருக
வீதெழுவர்தம்பருவமெண். (௪௦)

## மகளீரான்மலர்மரம்.

### கலித்துறை.

எண்மாதவிசண்பகம்பாலைபுன்னையெழிற்படலி
கொண்மாவகிழமராவொடசோகுகுராமுல்லைமின்
பண்பாடனீழற்படனட்டலாடற்பழித்தலுண்ணல்
கண்ணோக்குதையணைத்தல்சிரித்தற்கலர்க்காடுறுமே. (௪௧)

## திணையும், திணைக்குரியனவும்.

காடாகுமுல்லைகழிநெய்தலாகுங்கல்லாங்குறிஞ்சி
நாடாமருதநடலைவெம்பாலையிந்நாட்டிற்றெய்வங்
கோடார்கரன்வருணன்குகனிந்திரன்கூறுதுர்க்கை
மாடாயர்மீன்புல்லர்குன்றவர்கானவர்மள்ளருமே. (௪௨)

## அட்டபோகம்.

மேவுமெண்போகம்விளம்பிற்பெண்ணுடைவியன்கலன்பாற்
றூவியற்போசனந்தாம்பூலம்வீசுசுகந்தமன்பி
ஞெவெழிற்பாட்டலர்மெல்லணையாமிவைகன்கமைத
ருவிக்கடவுளருட்பாழிப்பெற்றவர்சார்விடமே. (௪௩)

## சிற்றின்பமும், பேரின்பமும்.

விடமொன்றுமைக்கண்ணிவாட்டமுஞ்சோகமிகுவிரகுந்
தடமென்றொருருவரைச்சாற்றுதல்சிற்றின்பந்தன்செயலை
படுகின்றதுன்பப்பிறவியும்போக்கெனப்பண்புடனே
யிடமூன்றுணையெனக்கூறுதல்பேரின்பமென்பதுவே. (சுச)

## ஐச்சுவரியம்-அ; உபசாரம்-கசு; பேறு-கசு.

வேண்டுநற்சுற்றமிராசாங்கமக்கள்பொன்மேவுமணி
யாண்டிடுந்தொண்டுநெல்வாகனமாமிலைவயட்டசெல்வங்
காண்டவிசீதல்கைகால்கழுநீரொடுமுக்குடிநீ
ராண்டளித்தேபுனலாட்டனல்லாடையணிதல்பினே. (சுரு)

பின்னுமுந்நூலளித்தேதேய்வைபூசல்பிரசமலர்
தன்னைப்புனைதனிசியரிதூவற்றரனைமுன்
னென்னிகர்தீபங்கர்ப்பூரமிடலமுதேந்தல்கொடன்
மன்னடைக்காய்மலர்மந்திரத்தர்ச்சித்தன்மாண்பெனவே. ()

என்னுமிவ்வீரெட்டுபசாரமாம்வலியேரிளமை
நன்மக்கணோயின்மைவாழ்நாட்புவிமின்னலனுகர்ச்சி
பொன்னறிவூக்கமிகுகல்விவெற்றிபுகழ்பெருமை
நென்முதலீரெட்டுப்பேறுநற்புண்ணியர்சேர்வனவே. (சஎ)

## அறம் - ஙஉ.

வண்ணான்புன்னாவிதன்காதோலைசோலைமடந்தடம்வெண்
சுண்ணாம்பறவைப்பிணஞ்சுடறூரியஞ்சோறளித்தல்
கண்ணாடியாவிற்குரிஞ்சுகல்வாயுறைகண்மருந்து
தண்ணீர்ப்பந்தர்தலைக்கெண்ணெய்பெண்போகந்தரலையமே. ()

மேதகுமாதுலர்க்குச்சாலையேறுவிடுத்தல்கலை
யோதுவர்க்குண்டிவிலங்கிற்குணவோடுயர்பிணிநோய்க்
கீதன்மருந்துசிறைச்சோறளித்தலியல்பிறரின்
மாதுயர்காத்தனற்கன்னியர்தானம்வழங்கலுமே. (சுக)

கற்றவறுசமையத்தார்க்குணவுகருதும்விலை
யுற்றதளித்துயிர்மீட்டல்சிறுருக்குதவனற்பான்
மற்றுமகப்பெறுவித்தல்சிறுரைவளர்த்தலெனப்
பெற்றவிவற்றினையெண்ணுன்கறமெனப்பேசுவரே. (ருo)

தசாங்கம்.

வரையாறுநாடூகரூர்துரகமதகரியே
விரையாருமாலைமுரசம்பதாகைமெய்யாணையென்னு
முரையார்தசாங்கத்தினெவ்வொன்றைநாடியுறவகுத்தே
தரையாளுமன்னர்முதலாயெவருக்குஞ்சாற்றுகவே. (ருக)

அட்டமங்கலம்.

சாற்றுங்கவரிநிறைகுடங்தோட்டிமுன்றற்பணமா
மேற்றியதீபமுரசம்பதாகையிணைக்கயலே
நாற்றிசைசூழ்புவிமீதட்டமங்கலநன்குழையின் [றுவே.
மேற்றிகழ்வேற்றடங்கட்செய்யவாய்ப்பைம்பொன்மெய்த்தி

ஆடவர்சிறப்புவமை.

திருமான்முருகனளகேசனிந்திரன்சேண்முகிலே
பொருமாரன்வீமன்விசயன்மெய்க்கன்னன்புகழ்த்தருமன்
வருமானசீவகன்மூவேழுவள்ளல்வனசநிதி
தருமாமணிசங்கந்தேனுவைப்போலவுஞ்சாற்றுவதே. (ருஙு)

மடவார்ச்சிறப்புவமை.

வதியுமின்னூர்தமைப்பேசத்திருவுமைவாணிமதி
ரதியையும்பர்பதிவாழுமற்றோரையரம்பையரை
மதிதருமான்பிடியன்னங்குயில்கிள்ளைமாமயிலைப்
பொதியவொப்பார்படையாவாரெழின்மதன்போர்செய்யவே.

சிவன்பெருமை.

போராடுவேலைவிழியழலேவிப்பொடிப்படுத்தி
நேரார்புரத்தைநகையாலெரித்துநிலாவணிந்து

காராழிநஞ்சுண்டுதக்கன்றன்வேள்விகடிந்தரக்க
ஞோராத்தலைநெரித்தேசண்டன்வீழவுதைத்தனனே. (ருசு)

உதிக்குங்கடவுட்கதிரோன்றன்பல்லையுறவுதிர்த்து
விதிக்குந்தலையைத்திருகித்தகர்வருப்வெங்கனற்கு
மதிக்குங்கரமறுத்திந்துவைத்தேய்த் துயர்வாணிதுண்டஞ்
செதிக்கும்படித்தள்ளியீமத் துட்டாண்டவஞ்செய்தனனே. ()

தாண்டவஞ்செய்துதழலுருவாகித்தரையிடந்து
கீண்டவனுக்குந்தெரிவரிதாயளகேசனுக்கு
வேண்டியசங்கநிதிமுதலாகவியந்தளித்த
காண்டகுஞ்சோதியென்பார்க்கெய்துமேகலைமாதவமே. (ருஎ)

மாதவர்வேள்விபுரிந்தேவிடுத்தவரியரவு
போதகம்வேங்கைமழுமான்முயலகன்பொங்கனலென்
றோதரும்வெம்பகைவீறொழித்தேதன்னுருவமைத்த
காதணிசங்கக்குழையான்சரணங்கருதுமினே. (ருஅ)

மின்னும்பவளமுஞ்செவ்வானும்வேணிமெய்யூர்தியுடன்
றுன்னுங்கொடிவிடையேந்தல்கபாலந்துடிசுடர்மான்
மன்னுங்கொடுங்கதிர்ச்சூலாயுதம்படைமாதவற்கு
முன்னந்திகிரியளித்தோன்முடித்ததுமூற்கங்கையே. (ருகூ)

கங்கையும்வில்வமுமென்புமராவுங்கடுக்கையும்வெண்
டிங்களுந்தும்பையுமாருமெருக்குந்திகழறுகும்
பங்கயனன்னத்துருவாகிநாடிப்பறந்தறியா
வெங்கள்பிரான்பவளச்சடைமீதணிந்தோர்பெற்றதே. (சு0)

விநாயகன்பெருமை.

வெண்பா.

தேய்ந்ததினிவளருஞ்செல்வப்புகழுறுமென்
றோய்ந்துமதிபொதியுமச்சடைபோற்—றோய்ந்தநிறச்
செந்துவர்மாமேனியெழிற்செல்வன்கழன்மலரில்
வந்திறைஞ்சுமன்பரெனும்வண்டு. (சுக)

வண்டார்மதப்பிரசவல்விலங்குகிம்புரிதூண்
டண்டார்புழைச்சிந்தூரத்தடக்கைத்—துண்டக்
கழைமருப்புச்செங்கட்கறையடிவெங்கோபக்
குழைசெவிநால்வாய்க்குஞ்சரம். (சாஉ)

முருகன்பெருமை.

சரவணத்துதித்தாறுதாயர்மகிழ்சண்முகனோர்
குரவனெனவீசற்குமார—னரிகுறவ
சிந்திறற்குமாமருகனேந்துயிலோன்மாமயிலோன்
கந்தன்சேவற்றுவசன்காண். (சாரு)

காஞ்சிமகளைக்கானவளைக்கைப்பற்றி
நாணவயனிந்திரனன்றுடுறவே—பூணு
மாண் சூர்ச்செற்றகடம்பின்மொய்ம்பனடியார்க்குக்
கருணைபெருகின்பக்கடல். (சாச)

திருமாலின்பெருமை.

நெடில்விருத்தம்.

கடலிற்றுயின்றுங்கடலடைத்துங்கடலைக்கடைந்துங்கடல்சுவறக், கணையொன்றேவிக்கடற்புவனங்கடந்துஞ்சரணொன்றுவளர்ந்து, முடலைக்குறைத்தும்புவியிடந்துண்டுமிழ்ந்துமுடலைச்சகடுதைத்து, மூரிக்களிறேறுடிணைமருதமுனிந்தும்விளவிற்கன்றெறிந்து, மடலூற்றெறிந்துபொருங்குருகினலகையிடந்துங்கலைகவர்ந்து,மாயர்குலத்திவ்வந்துதித்துமகரர்கிளையைவேரறுத்து, மிடலுற்றலகைமுலையருந்தியான்பாலிழுதுவெண்ணெய்தயி, ரெடுத்தாங்கருந்திப்பதினாயிரவர்குரவைகொண்டானே.

குரவைகுனித்துவிளையாடிக்குன்றுகுடையாயெடுத்தொருகாற்
கொண்டறடுத்துவேயூதிக்கோலிற்றுயின்றுநிரையினமேய்த்
தரவினடித்துவருமுல்லையாயர்தலைவன்யமுனையினீ
ராடுஞ்சிறியகருஞ்சிறுக்கனளிக்கமகவையர்தனார்க்காய்

விரைவினழைக்கயமபுரம்போய்மீண்டகுருசிற்றிகிரியினால்
வெயிலைமறைத்துவலம்புரிவாய்விட்டுமதமாவெங்கரவாற்
பரவியழைக்கவந்தருளிப்பார்த்தன்றனக்குத்தேர்கடவிப்
பரிந்துபோற்றத்துகிலிழந்தபாஞ்சாலிக்குமளித்தானே. (சுசு)

அளிக்குஞ்சிறுசேலுருவெடுத்துமரியமறையைமுன்கொணர்ந்து, மாமையுருக்கொண்டடைகிடந்துமாதிவராகவுருவெடுத்துங், களித்துத்தூணின்மடங்கலுருக்காட்டிக்கனகனுடற்பிளந்துங், கடும்போர்வலியமாவலியைக்காலினடக்கிப்புவிகவர்ந்தும், வளிக்குந்தொலையாமுதுமதுகைவாணன்புயமாயிரமறுத்தும், வஞ்சக்கஞ்சனுடல்செகுத்தும்வனம்போயரசுதுறந்திருந்துங், குளிக்குஞ்சரத்தாற்றாடகையைக்கொன்றுமிகல்வாலியைக்கடிந்துங், கொடியகவந்தன்புயந்துணித்தகொண்டலமுள்ளங்குடிதங்கும். (சுஎ)

முடுகுவிருத்தம்.

தங்குந்திருமறுமார்பனயோத்தித்தலைவன்பலவிமன்
றடவடமதுரைத்திருநகராளன்றரைமகள்சானகிதன்
கொங்கைத்துணைவன்றசரதராசகுமாரன்வசுதேவன்
குலம்வருமுதல்வனந்தன்மைந்தன்கோதையசோதையிளஞ்
சிங்கங்கோசலைசெல்வன்றேவகிசிறுவன்சனகையர்கோன்
றெய்வப்புதுமணவாளன்பஞ்சவர்செல்வச்சிறுதூதன்
பொங்குங்கடலிடையறிதுயில்கூரும்புருடன்சங்குசரம்
பொருதண்டாழிவில்வாளுடனேந்தும்புனிதனைநினைவீரே. ()

வெண்பா.

வீறுங்கொடியும்விய னூர்தியுங்கருடன்
கூறுமெழுத்தெட்டுடையான்கோபியர்மா—றேறுகின்ற
மாயவன்பின்னைசத்யபாமையுருக்குமணி
நேயன்றிருத்தாணிலே. (சுக)

## பிரமன்பெருமை.

நினைக்கிலயனே றுநெடுங்கொடிப்புமன்ன
நனைக்கமலந்தாரிருப்பாநாட்டுங்—தனிப்படையே
தண்டமுந்நூலாரந்தவளமலர்வாணியவ
னெண்டொடியென் றுள்ளத்துணர் (எ௦)

## இருநூன்முறை.

உணரும்படியேயுரைத்தவற்றையெல்லா
மிணர்மென்றொடையாமியல்பாற்—றுணையெழுத்தாற்
சொல்லாயச்சொல்லின்றொருநிதனைதொடுக்க
வல்லாக்கணிபெறலாமால். (எக)

இரத்தினச்சுருக்கம முற்றிற்று.